

# ஏழு இறகுகள்

'ஹார்டி இந்திக மலபார்சி' எனப்படும் மேற்கு மலைத் தொடரைப் பற்றிய தாவரப் பெருநூல் 1678-ல் ஹாலந்து நாட்டின் தலைநகரான ஆம்ஸ்டர்டாமில் வெளியிடப்பட்டு, இயற்கை யியல் கழகங்களின் கவனம் பெறாமல் விடுபட்டுப் போய், பின் அதன் மூலப்பிரதி லிஸ்பன் நகரில் உள்ள பெலம் மனிதவியல் அருங்காட்சிச் சாலையில் அண்மையில் கண்டுபிடிக்கப்பட்டது. ஏசுசபைப் பாதிரிகளான ஜோஸ் டிவாரியா மற்றும் ஜான் கான்ஸ்லாவ் என்ற ஸ்பானியரும் இணைந்து மேற்கொண்ட மேற்கு மலைத்தொடரின் அரிய மலர்களைப் பற்றிய சித்திரத் தொகுப்பானது 1956-ல் கண்டுபிடிக்கப்பட்ட பின்பு அதன் மீது அதீத கவனம் குவியப்பட்டது. ஞாபகத்தினின்று என்றோ விடு பட்டுப் போயிருந்தபோது, வேம்பர்கள் என்னும் மேற்கு மலை வாசிகள் இன்றும் ஜோஸ் டிவாரியாவையும் கான்ஸ்லாவையும் மறந்துவிடவில்லை. அதிலும் மூன்று கன்னியரை விலைக்குப் பெற்றுப்போன நிகழ்வு ஒரு புராணீகத்தின் கதைப் பாடலைப் போல இன்றும் பாடப்பட்டு வருகிறது. பாதிரிகள் பதினேழு ரூபாய்க்கு வாங்கிப்போன மூவரில் ஒருத்தி இன்றும் வேட்டைத் திருநாளில் ருது எய்திய இளம்பெண் மீது கூடி, தானறியாத ஆங்கிலத்தில் ரௌத்திரம் கொண்டு குதித்து, உரத்து ஏழுநிற இறகு பொருத்தப்பட்ட தொப்பியும், பச்சை நிற அங்கியும், மரச் சிலுவையும் கொண்ட ஓலைப்பெட்டி கொண்டு வரப்பட்டு முன் காட்டப்படும்போது, வேம்பர் இனப் பெண்கள் யாவரும் மாரடித்து உரத்து அழுவதும் அவர்கள் பின்பு பாஷையற்ற இசையில் ஓங்காரமிட்டு இரவெல்லாம் நீள்வதாகத் தொடர்கிறது.

ஏசுசபையின் சேவைக்குத் தன்னை ஒப்புக்கொடுத்திருந்த ஜோஸ் டிவாரியா, மலையின் சரிந்த பாறைப் புடைவுகளில் வாழ்ந்து

வரும் வேம்பர்களின் துயரத்தினைப் போக்கி, அவர்களை மீட்புப் பாதையில் பயணம் செய்து வைக்க விரும்பி மலையின் ஆழ்ந்த வனவிருட்சங்களைத் தாண்டி அலைந்து கொண்டி ருந்தார். வேம்பர்களில் எவரும் ஜோஸ் டிவாரியாவுடன் பேசவும் தயாரில்லை. அவர்கள் நாணலை அறுத்து உலர வைத்து அதை முடையும் வேலை கொண்டிருந்தனர். அம்பலக்காட்டுக்கு வந்திருந்த ஜான் காஸ்லாவ் மதப் பிரசங்கங்களை விடவும் இயற்கையியலில் மிகுந்த ஈடுபாடு காட்டவே அவருக்குப் புனிதரின் தேவாலயத்துக்கான மலர்த் தோட்டம் அமைக்கும் பணி தரப்பட்டபோதுதான் ஜோஸ் டிவாரியாவைச் சந்தித்தார். சரியாக கான்ஸ்லாவ் சந்திப்புக்கு இரு தினங்களுக்கு முன்பாக டிவாரியா ரோகம் கொண்டிருந்த வேம்பன் ஒருவரின் வீட்டுக் குள் போயிருந்தார். அது கற்களை அடுக்கிக் கட்டப்பட்டிருந்த வீடு. அவர் கண்களை இருளுக்குப் பழக்கியவராக உள்ளே பார்த்தபோது பாறையில் அடர்ந்து முறுக்கேறின பசிய கொடி களும், பல வர்ணங்களில் காட்டுப் புஷ்பங்களும் பூத்திருந்தன. அதன் வாசனை அவரை ஈர்த்தது. அதன் அருகே போனபோது கொடிகளில் ஓணான்கள் ஒளிந்திருப்பதைக் கூட கண்டார். வனத்தின் வசீகரம் ததும்பும் வீட்டை வியந்தபடி அதன் அருகாமைக்குச் சென்றபோது அவை நிஜமான செடிகொடிகள் அல்ல என்றும், அவை பாறையில் வரையப்பட்ட சித்திரங்கள் என்றும் கண்டார். பூத்திருந்த பூக்களும் ஓணானும்கூட சித்திரங் கள்தான். ஆனால் அந்தச் சித்திரப் பூக்களில் வாசனை கசிந்து கொண்டிருந்ததன் மர்மம் மட்டும் பிடிபடவில்லை. டிவாரியா நோயாளிக்குரிய பிரார்த்தனை செய்துவிட்டுத் திரும்பும்போது மூன்று கன்னியர் உள்ளே நுழைந்தனர். அவர்கள் சகோதரிகள் என்பது முகச்சாயலிலே தெரிந்தது. என்றாலும் வயது வேறு பாடின்றி ஒரே தோற்றம் கொண்டிருந்தனர். டிவாரியா அந்தச் சுவரில் உள்ள பசுமைச் சித்திரங்களைச் சுட்டிக்காட்டிக் கேட்ட தற்கு அவற்றைத் தாங்களே வரைந்ததாகச் சொன்னார்கள். வாசனையோடு சித்திரம் வரைவதைப் பற்றிய வியப்பு கலையாமல் தன் மடத்துக்குத் திரும்பி வந்தார் ஜோஸ் டிவாரியா.

இதை அவர் கான்ஸ்லாவிடம் சொன்னதும் அவர் மனத்தில் நெடு நாள்களாகப் புதையுண்டிருந்த தாவரப் பெருநூல் தொகுப்பின் ஆசை வெடித்துக் கிளைக்கத் தொடங்கியது. மறுநாளில் விடிவதற்கு முன் அவர்கள் புறப்பட்டு வேம்பரின் வீட்டை அடைந்தனர். பாதிரியாரின் வெளுத்த உருவங்களைக் கண்ட

பெண்கள் பயந்து திகைத்திருந்தனர். கான்ஸ்லாவ் நெடுநேரம் அந்தப் பாறையில் வரையப்பட்ட மலர்களை நுகர்ந்தபடி இருந்தார். மயக்கமூட்டும் வாசனை. அவர்கள் இதை எவற்றால் வரைந்தனர் எனக் கேட்க, அவர்கள் ஏழுவர்ண இறகுகளைக் காட்டினர். அது ஏதோ ஒரு பறவையின் இறகிலிருந்து உதிர்ந் திருந்தது. அப்போதே அவர் மேற்கு மலைத் தொடரின் மலர் களுக்கான வகையமைப்பு செய்ய முடிவு செய்தார். சில வாரங்களுக்குப் பிறகு ஜான் கான்ஸ்லாவ் தனித்து மலைக்குச் சென்று அந்தக் கன்னியரின் தகப்பனோடு பேசி அவர்களைப் பதினேழு ரூபாய்க்கு மாற்றாகப் பெற்றுக் கொண்டபோது கல்படிவுகளைப் போல மூன்று கன்னியரும் ஒடுங்கிக் கொண்டனர். அவர்களது வர்ணச் சிறகுகளை எடுத்துக்கொண்டு, கூட்டிக்கொண்டு மலையின் அடிவாரத்தில் இருந்த விடுதி ஒன்றில் வந்து தங்கிய இரவில் டிவாரியா அவர்களைக் கண்டு திகைத்தவராக, ‘இந்தப் பெண்களை என்ன செய்யப் போகிறாய்?’ என்று கேட்க, ‘பயிற்றுவித்துக் காகிதங்களில் மலர்களைத் துல்லியமாகப் பிரித்துச் சித்திரமாக்கிப் பதிவு செய்வேன். மலர்களை அதன் வாசனையோடு சித்திரமாக்கி வெளியிட்டால் உலகின் கவனமே என் பக்கம் திரும்பி விடும்’ என்றார். ஜோஸ் டிவாரியா சுயபயம் கலையாதவராக மௌனம் கொண்டார். கான்ஸ்லாவ் மூன்று பெண்களுக்கும் அங்கி போன்ற உடுப்பும் மரச்சிலுவையும் உணவும் தந்து ஒரு தடுப்பறையினுள் அடைத்திருந்தார். அந்தப் பெண்கள் தலை கவிழ்ந்தபடியே இருந்தனர். இருளைக் குடித்தவர்களைப் போல் அவர்களின் இறுக்கம் உக்கிரமடைந்தபோது உணவு கொண்டு போன பெண் உரத்தக் குரலில் அவர்களுக்கு உணவைத் தந்து மிரட்டியதும், இரு கைகள் அவள் வாயை மூடின. பின்பு அவளின் காது அறுபட்டுத் தனியே கிடந்தது. எங்கும் ரத்தம் துளிர்த்துப் பெருகியிருந்தது. அந்த மூவரில் ஒருத்தி தன் காதைத் துண்டித்து விட்டதாக வேலைக்காரி சொன்னதும் பாதிரி கான்ஸ்லாவ் மூவரையும் நிறுத்தி அவர்களின் பற்களைக் காட்டச் சொன்னார். அவர்கள் வாயைத் திறக்கவேயில்லை. தன் பலம் கொண்டு வாயைத் திறந்தபோது மூவர் பல்வரிசையிலும் ரத்தக் கறை இருந்தது. ஆத்திரம் மீறியவராக அவர்களை ஏசித் திரும்பினார்.

இருநாளின் பிறகு ஆணைப் போல காக்கி நிற உடையும் காகிதங்களையும் அவர்களுக்குத் தந்து இரு பாதிரிகளும் மேற்கு மலைக்குக் கூட்டிப்போயினர். அந்தப் பெண்கள் எதையும்

மறுக்கவில்லை. கண்ணில் படும் மலர்களை எல்லாம் அதன் வாசனையோடு காகிதங்களில் சித்திரமாக்கினர். கான்ஸ்லாவ் மிகுந்த சந்தோஷம் கொண்டார். நாள்களின் சுழற்சியில் பள்ளத் தாக்குகளிலும் மலைப் பிளவுகளிலும் இறங்கி மலர்களை வரைந் தனர். என்றாலும் அவர்கள் எவரோடும் பேசிக் கொள்ளவே இல்லை. இந்த மௌனம் சில நேரங்களில் ஒரு கத்தியைப் போல மினுங்கிக்கொண்டிருக்கும். கான்ஸ்லாவ் அவர்களை மழைக் காலத்தின் முன்பாகவே வேலையை முடித்துவிட அலைக் கழித்தார். ஒரு நாளில் அவர்கள் படுகை போல மஞ்சளும் நீலமும் கொண்ட மலர்களின் சரிவில் இறங்கி வரைந்துகொண்டி ருந்தனர். பாறைகள் வளைந்து கிடந்தன. ஒரு பாறையில் ஏறி தொலைவு வரை பார்த்துக்கொண்டே இருந்தார் கான்ஸ்லாவ். சூரியன் தகித்துக்கொண்டிருந்தது. அவர் வெம்மையில் தனது கைகளை நீட்டி முறுக்கியபடித் திரும்பிப் பார்த்தபோது அந்தச் சரிவில் மூன்று கன்னியருமில்லை. அவர் உரத்துப் பெயர் சொல்லி அழைத்தார். அவர்கள் தென்படவில்லை. தாள முடியாத கோபம் கொண்டவரைப் போல அவர் காட்டுச் செடிகளை மிதித்துக் கத்தியபடி ஓடினார். பூச்சிகள் திடுக்கிட்டுப் பறந்தன. அவர்கள் ஏதோ புள்ளிகளில் பதுங்கிப் போயிருந்தனர். சூரியன் மறையும்வரை தேடி ஓய்ந்தவராகத் தன் இருப்பிடம் திரும்பியதும் டிவாரியாவை அழைத்தார். வனத்தினுள் தேடுவது மிகச் சிரமம் என்பதால் வேட்டை நாய்களோடு கூடிய வேட்டையாள் ஒருவனை வனத்தினுள் அனுப்பினார்கள். மூன்று நாய்களோடு அவன் தேடி அலைந்தான். நாய்களால் அவர்களின் சுவடறிய முடியவில்லை. ஓடிக் களைத்தன. அதற்குள் சாரல் தொடங்கிவிட்டது. எனவே காட்டில் எப்போதும் காற்று விரிய மழை பரவி நீண்டது. அவர்களின் பிடிக்கு அப்பால் மூன்று பெண்களும் வனத்தினுள் ஒளிந்திருந்தனர். மழையோடும் கான்ஸ்லாவ் வேட்டை நாய்களை அழைத்துக்கொண்டு தேடினார். ரௌத்திரம், இயலாமை பற்ற அவர் முகம் கறுத்துக்கொண்டே வந்தது.

வானவில் தெரிந்த ஒரு காலையில் வேட்டைக்காரன் இரு பெண்களைப் பிடித்துக்கொண்டு வந்தான். ஒருத்தி முதிய விருட்சமொன்றின் புதரினுள் பதுங்கியிருந்ததாகவும் மற்றவள் சருகுக் குவியலில் சுருண்டு படுத்திருந்தாள் எனவும் காட்டியதும் அவர்கள் முகத்தில் சரிந்த மயிர்களைப் பற்றித் தூக்கிப் பார்த்தார் கான்ஸ்லாவ். பற்கள் உடைந்திருந்தன. முகம் வீங்கியிருந்தது.

வேட்டைக்காரனோடு சண்டையிட்டிருக்க வேண்டும். இருவரையும் பாதுகாப்பாக சங்கிலியிட்டு கூட்டிப்போனார். மூன்றாமவளைப் பிடிக்க இயலவில்லை. இரு பெண்களும் காய்ச்சல் கண்டு பிதற்றிக்கொண்டிருந்தனர். அவர்களுக்குரிய மருந்து தந்து இரவெல்லாம் பாதிரி இருவரும் உடனிருந்தனர். அந்தப் பெண்கள் இருவரும் குணமான பின்பு மெலிந்து போயினர். ஆண் உடையில் அவர்களின் தோற்றம் பயம் கொள்ளச் செய்தது. அதன்பிறகு அவர்கள் எதிர்ப்பு கொள்ள வில்லை. சில நாள்களில் மீண்டும் மேற்கு மலைக்குப் போகத் தொடங்கினர். அவர்கள் வரைந்த சித்திரங்கள் தத்ரூபமாக இருந்தபோதும் அவற்றில் பூ வாசனை இல்லை. தனது வேலையை வேகமாக முடித்துவிட ஆயத்தம் கொண்ட கான்ஸ்லாவ் தினமும் ஆயிரக்கணக்கான மலர்களை வரையச் செய்தார். உறக்கத்திலும் அவர்கள் விரல்கள் எதையோ வரைந்து கொண்டிருந்தன. ஒரு நாளின் காலை விழிப்பில் தனது தலையின் அருகே செந்நிறப் பறவை இறகு கிடப்பதைக் கண்டார் கான்ஸ்லாவ். டிவாரியாவின் படுக்கையிலும் அதே இறகு காணப்பட்டது. அதன் பின்னாள்களில் காணாமல் போன மூன்றாம் கன்னி அவர்களின் தொலைவில் தென்படத் தொடங்கினாள். அவள் அவர்களைப் பார்த்துக்கொண்டே இருப்பாள். அது கான்ஸ்லாவை அதிகக் கோபம் கொள்ளச் செய்தது. பிடியில் தப்பி அலையும் சிறுத்தை போல அவள் பாறைகளில் நின்றாள். சில நாள்களுக்குப் பிறகு அவர்களுக்குத் தொலைவில் எப்போதும் அவள் இருப்பதைக் கண்டு தாங்க முடியவில்லை. வேட்டைக்காரனைத் திரும்ப அழைத்தனர். அவன் தனது மரத் துப்பாக்கியுடன் அவளைத் தேடிச் சுடப் பார்த்துக்கொண்டிருக்கும்போது மறைந்துவிடுவாள். முடிவாக ஒரு பகலில் அவளைச் சுட்டு காட்டு விலங்கை இழுத்து வருவது போல் கொண்டு வந்தான். வனத்திலே அவளைப் புதைத்தனர். யாவையும் கண்டபோதும் மற்ற இரு பெண்களும் கண்ணீர் விடவில்லை.

தனது வேலையின் முடிவுப் பகுதிக்கு வந்த கான்ஸ்லாவ் லிஸ்பனில் அச்சிட முடிவு செய்து கடல் பயணத்துக்கு ஏற்பாடு செய்தார். தன்னுடன் இரு கன்னிகளையும் கூட்டிக்கொண்டு லிஸ்பன் சென்றார். சித்திர தாவரப் பிரதி தயாரித்து முடித்த ஒரு நாளில் லிஸ்பன் புறநகரில் உள்ள பண்ணை வழியாக நடந்து ஒரு தடாகத்தின் அருகில் வந்தபோது இரு வேம்பப் பெண்களும்

மீன்களெனத் தாவி நீருக்குள் போயினர். பாசி அடர்ந்த குளத்தினுள் புதைவு கொண்டுவிட்டனர். அவர்களின் குதிப்பில் சலனமுற்ற தண்ணீர் மீண்டும் கூடிக்கொண்டது. அந்த நீர்ப்பரப்பினின்று விடுவிக்கவோ அவர்களைத் தேடவோ பின் எவராலும் முடியவில்லை.

தங்களது தாவரப் பெருநூலை லிஸ்பனில் இருவரும் தமிழ் அச்சுப் பதித்தே வெளியிட்டனர். பின் இருவரும் மலபார் பகுதிக்குத் தங்கள் வாழ்நாளில் வரவே இல்லை. தங்களது பெருநூல் எவராலும் கவனிக்கப்படாத துக்கமும் அலைக்கழிப்பு மிக்க கொடுங்கனவும் சூழ, வயோதிகத்தின் முன்பே மரணித்தனர். ஆனால் தென்மலையில் ஒரு சிலுவை நடப்பட்ட சமாதியொன்றில் கிளைத்த சிறு செடியொன்று கபில நிறத்தில் இரண்டு மலர்களை மட்டும் பூத்ததையோ, அது எப்போதும் பெண் வாசனையைச் சுரந்தபடி இருப்பதையோ காண அங்கு எவருமே இல்லை.